உ

சிவமயம்.

# திருப்போரூர்ச்
# சுப்பிரமணியர்தேவாரம்.

இஃது,

திருமயிலை.

**வைதிலிங்கதேசிகரால்**

பார்வையிடப்பட்டு.

சிதம்பரம்.

பா, முத்தியாலுசெட்டியார்

கேட்டுக்கொண்டபடி

செவிலிமேடு.

**லட்சுமணமுதலியா**

ரவர்களால்

இந்துவித்தியாநிலய அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

உருத்திரோற்காரி ௵ - ஆடி ௴



உ

சிவமயம்.



# திருப்போரூர்ச்
# சிவசுப்பிரமணியக்கடவுள்பேரில்
# தேவாரம்.



பண் - காந்தாரம்.

பொன்னணிமதிலும்வானோர் புகழ்சினகர முநாளும், என்னுளேகண்டுபோற்ற வெள்ள ளவுணர்வுமில்லேன், அன்னியமாதர்வீட்டே யா லயமவரேதெய்வம், என்னவேயுழலுகின்றே னென்னையாள்போரூரானே... ... ...(க)

வேதமாய்வேதத்துச்சி வீறுமெய்ப்பொ ருளாய்விந்து, நாதமாய்நாதாதீத ஞானமாய் நின்றசோதி, கோதையர்வலையிற்சிக்கிக் குண மழிவேனையாள்வாய், தாதவிழ்நீபத்தோளா சரவணபோரூரானே... ... ... ...(உ)

அந்தமுமுதலுமானாயடிமுடிநடுவுமானாய், தந்தையுந்தாயுமானாய் தாரமுமகவுமானாய், ப ந்தமும்வீடுமானாய்ப் பரப்பிரமவஸ்துவானாய்

எந்தையேயெம்பிரானே என்னையாள்போரூ ரானே... ... ... ... ... ... (௩)

அல்லல்சமுசாரமென்னு மவதியிற்படவு மாட்டேன், சொல்லவுமுடியாதந்தச் சூட்ச முங்காணமாட்டேன், வெல்லவுமென்னாலில் லை மெய்யனேஞானமூர்த்தி, தில்லையில்வாழு மெங்கள் சிவகுருபோரூரானே... ... (௪)

மோசஞ்செய்வேசைமாதர் மோகவெங்க டலில்வீழ்ந்து, பாசமாமதிமயங்கிப் பாவியா ய்ப்பொன்னைத்தேடி, நேசமாயன்னார்க்கிந் தே நீணிலத்தெய்த்தேனல்லா, லீசநிற்கன்பு செய்யே னென்னையாள்போரூரானே...(௫)

நதிகளில்மூழ்கமாட்டே னன்மலர்கொய் யமாட்டேன், நிதமுநின்னன்பர்பூசை நிலை பெரசெய்யமாட்டேன், கதியெனவேசைமா தர் கடைகிடந்துழலுகின்றேன், ததியிதுகம லப்பாதந் தந்தருள்முருகவேளே... ...(௬)

கங்கையும்பிறையுஞ்சூடுங் கடவுளர்பெற்ற பாலா, எங்களமுனதுசீர்கண் டென்குறைதீ ர்க்கவல்லேன், றுங்கநால்மலறவழுத்துந்தொ ன்றலேயண்டர்கோவே, சங்கரகுருவாய்நின் ற சண்முகப்போரூரானே... ... ... (௭)

ஆசையாய்மோசஞ்செய்தே யல்கிலாய் பொருளைத்தேடி,நாசமாய்மாண்டாரல்லா லொட்டினினின்றாரில்லை, மோசமென்றறியலானே ன் முருகனேயிந்தவேளைத், தாசனெலன்றென் னையாள்வாய் தயாநிதிபோரூரானே ... (அ)

வஞ்சியர்பாசமோச வலையிடைமால்போ ற்சிக்கி, நெஞ்சகமகிழ்ந்திடாது நிலைபெறஞ் சூட்சுமத்தை, அஞ்சலென்றெளியனேற்கிங் கருள்செய்வாரொருவரில்லைச், செஞ்சுடர்வ டிவாய்நின்ற திகழ்திருப்போரூரானே... (கூ)

அப்பர்சுந்திரர்சப்பந்த ரறுபத்துமூவரன் றி, ஒப்பிலாவாதவூர ருயருட்டலினிருமாலுக் கர், மெய்ப்பரபத்திஞான மேவிநித்தியவாழ் வுற்றார், துப்புறமென்விசாரந் தொலைத்தரு ள்போரூரானே... ... ... ... ... (ம)

சாவதாசித்தமென்றே சகலருமறிந்தபோ தும், பாவிகளதனையெண்ணிப் பார்த்துமே நடக்கமாட்டார், தாவியிங்கலைகின்றேனைத் த டுத்தருட்புரியுமையா, ஆவியுட்கலந்துநின்ற வறுமுகப்போரூரானே... ... ... (மக)

ஒருவனேதெய்வமென்று முயிரெலாமொன் றேயென்றும், அரிதனிலுணராட்புல்ல ரவ னியிலிருந்துமென்னும், விரிவுறமனந்தெய்

வ வேதங்கள்காணமாட்டேன், பரிவினிலென்
னையாளும் பரமனேபேரூரானே... (யஉ)

ஈயாதலோபிமக்க ளிருந்துமென்னிறந்து
மென்ன, ஓயாமற்பொய்கள்பேசி யுலகினில்
வாழ்ந்துமென்ன, காயாதமரமேலென்றுங்க
ல்லேறுசென்றிடாதால், தாயாகியென்னையா
ளுஞ் சரவணப்பேரூரானே... ... (யஈ)

குளித்துமென் றெழுதுமென்ன சோணலா
ய்ப்பூசியென்னக், களித்துளமொன்றுயார்க்கு
ங் கையினாலுதவவேண்டும், ஒளித்துநான்பே
சிப்பேசி யுன்னருண்மறந்திளைத்தேன், தளிர்
த்திடவென்னையாள்வாய் சரவணப்பேரூரா
னே... ... ... ... ... ... ...(யச)

அன்பில்சம்சாரமென்றவடவியிலாசைப்பே
யால், துன்பமீக்கொண்டுநாளும் சுவானனிற்
குணாத்துனின்றேன், மின்புரைமருங்குற்றெய்
வ மெல்லியல்மகிழுமோகா, என்பொலாமணி
யேபிசாவென்னை யாள்பேரூரானே...(யரு)

எத்தனைபகுத்துங் கேட்டுமேற்றூல்லோரை
ச்சேர்தும், பத்தியனிலைபெருதபொறுமையு
ம் பெற்றேனில்லை, சித்தமுந்தெளியாப்பாவி
செகமிசையிருந்துமென்ன, கற்றறிமூடனு
னேன் கதிபுகல்பேரூரானே... ... (யசா)

அங்கத்தைவிலைசெய்மாத ராசைவாரிதியிற் புட்டே,எங்கணுங்கரைகாண்கில்லே னேறவோர் பிணையுங்காணேன்,சங்கரிமகனுவந்தசண்முக வேளேயுன்றன், பங்கயக்கருணைநோக்கம் பார்த்தருள்போரூரானே... ... ... (௰எ)

முன்னுளோர்சொன்னவேத மொழியெலாம்படித்தும்கேட்டும்,என்னுளேயுனைக்கண்டேத்தி யிறைஞ்சுமாறறியகில்லேன், கன்னியர்மாயமோகக் கானிடைபட்டுநின்றேன், மன்னுமாமயின்மீதேறி வந்தருள்போரூரானே...(௰அ)

கண்ணுளபோதல்லாமற் காட்சிகள்கெட்டபின்னர், நண்ணுவதுண்டுகொல்லோ நாதனேயுன்னையன்றி, எண்ணவோர்தெய்வமுண்டோ வீசனேவள்ளிநேசா, அண்ணலேயென்னையாள்வா யணிமதிற்போரூரானே... ... (௰௯)

கல்லையுமுடைக்கவல்லேன்கடலையுந்தாண்டவல்லேன், சொல்லுமுலகமெல்லாம் சோதனைசெய்யவல்லோம்,* வல்லணிமுலையார்வஞ்சமனநிலைகாணவொண்ணு, தல்லறீர்த்தென்னையாள்வா யணிமதிற்போரூரானே... ...(உ௰)

நெறியதுகண்டதில்லை நின்மலமனதுமில்லை, குறியருத்திலகுருநாதக் குருவையுந்தொ

* வல் - சொக்கட்டான்.

ழுதில்லை, பொறுமையாயுன்னைக்காணப் பு
ண்ணியமேன்னசெய்தேன்,இறைவனேடியின்
மீதேறு மெந்தையேபோரூரானே... (உக)

கோழியுங்கொடியும்வேலும் கோமளமயி
லும்வாழி, மாழைமைப்பரவுமொண்கண் மா
தராரிருவர்வாழி, ஆழிசூழுலகிலுள்ள வடியவ
ர்யாருய்வாழி, ஊழிகாலத்துமெங்க ளுயர்திரு
ப்போரூர்வாழி... ... ... ... .. (உஉ)



திருப்பொரூர்த் - தேவாரம்
முற்றிற்று.

